अनुप्रवेशपरित्यागங்களும் ஒரொன்று கிளர்ந்து போருகையும் எல்லாவற்றுக்கும் तुल्यம். दुर्वास-नामूलமான रुचिमात्रத்தாலேயாதல், दुरभिमानमात्रத்தாலேயாதல் அவற்றிலே ஒன்றை प्रमाण மென்று பற்றுவார்க்கும், कर्तव्यभागத்துக் கலந்து वेदமொழிய ஏதேனுமொன்று प्रमाणமாக அமையும் என்பார்க்கும் ஓர் अनुष्ठानादिव्यवस्थैயின்றிக்கே चार्वाकशेषமாம்படியாம். சில काम्यங்கள் फलिக்கக் காண்கையாலே அவற்றோடே சேர்ந்த बाह्य शास्त्रங்களை முழுக்க प्रमाणமென்று கொள்ளில்—இதுவும் वेदத்துக்கும் वेदबाह्यங்கள் எல்லாவற்றுக்கும் ஓரொரு मुखத்தாலே तुल्य

---

पाञ्चरात्रस्यकथं विचारः क्रियत इत्यत्राह—परपक्षेति। सत्यं-तत्र परपक्ष एवदूषणीयः। उत्पत्त्यसम्भ-वाधिकरणेपि पञ्चरात्रमप्रमाणमिति परमतमेव दूषितमिति न पादार्थाननुगतिरित्यर्थः। तथा च पूर्वं सांख्यादीनाम् परमतानां खण्डनं, इहतु पाञ्चरात्रे परमतत्वस्य खण्डनमिति भावः। एवमेतावता सांख्यादीनामप्रामाण्यं पाञ्चरात्रस्य प्रामाण्यञ्चप्रसाध्य सर्वागमानां नारायणैकनिष्ठत्वकथनमप्येतदविरोधेन तात्पर्यतोनिर्वहति—आकैयालिति। एतदुक्तंभवति—पूर्वोक्तरीत्या शान्तिपर्वणि "किमेतान्येकनिष्ठानि पृथङ्निष्ठानिवामुने" इति जनमेजयप्रश्न मुपक्षिप्य—किंवस्तुस्थितिं परिपृच्छसि? अथवा वक्तृपुरुषाभि प्रायमिति विकल्पं मन्वानो वैशम्पायन आह—"ज्ञानान्येतानि राजर्षे विद्धि नाना मतानिवै इति द्वितीये एवं वक्त्रभिप्रायेण सामाधानमुक्त्वा, कस्यको वक्तेत्यत्राप्याह—सांख्यस्य वक्ता कपिल इत्यादिना। प्रथमे वस्तुस्थिति प्रश्नेत्वाह—यथागमं यथान्यायं निष्ठानारायणः परइति। अब्रह्मात्मकतया तत्तद्वाद्युक्ता-नामपि प्रकृत्यादितत्त्वानां सर्वंस्वल्वित्यादिना ब्रह्मात्मकत्वमनुसन्दधानैरस्माभिर्वस्तुगत्या नारायाण एवनिष्ठेत्यपि वक्तुं शक्यमिति। तदिदमुच्यते—सर्ववेदान्तानुगुणेति। अयं यथागमशब्दार्थः। समीचीनन्या येति यथान्यायशब्दार्थः। अनुग्राहककथनं-उपब्रह्मणेति। तत्त्वविषयेति। नत्त्वाचारविषय इतिभावः। तद्भागस्य सर्वथा त्याज्यत्वस्यानुपदं वदयमाणत्वात्। कानितानि तत्त्वानीत्यत्राहप्रकृतीति। अथाचारांशे एवं निर्वाहासम्भवंदर्शयति—अल्लदु इति। सांख्यादिभिरुक्तसर्वकर्मसन्न्यासाग्नीषोमीयपशुहिंसामिश्रत्वादे-पाशुपतोक्तब्राह्मण्यापादककपालपात्रभोजनशवभस्मस्नानादेश्चात्यन्तवेदविरुद्धतयाऽविरोधोपपादनं दुष्कः रमितिभावः।

अथास्तु—वस्तुतः समयान्तराणि सर्वाणिसदोषाणि इति। अथापि तेषु तान् दोषानज्ञात्वा वैदिकेपथि प्रतिष्ठितिर्दुःशका। न च केषाञ्चिदेव तेषां ज्ञानं पर्याप्तम्। पुनर्मतान्तरेषु कतिपय गुणज्ञानेन

---

கொள்ளுகிறார்கள். சித்தம் கலங்கும்படி செய்து அவர்களுள் புகுந்துகொண்டு தங்கள் காரியத்தை ஸாதித்துக்கொள்ளுகிறார்கள். காலையிலெழுந்ததும் ஏழு நாழிகைக்குள்ளேயே ததியோதந அந்நம் வழங்குவதாலும், பிழைக்க வழியில்லாதவர்கள் வந்து சேர்ந்துக் கொள்ளுகிறார்கள். மேலும்—பிறர் மதங்களில் ப்ராம்மண க்ஷத்திரியாதி ஜாதி பேதங்கள் கிடையா. ஆண், பெண், மனிதன், மிருகம் என்ற ஜாதி முறைகள் தானுண்டு. குடித்தல் தின்னுதலில் கட்டுபாடுமில்லை. நமது மதத்தில் அநாதிகாலமாக பரம்பரையில்வந்த பிராமணாதி ஜாதி பேதங்கள்—'ஞாயிறு—திங்கள்—என்ற வார முறைபோல நிரம்ப உண்டு. அம்மதங்களிலும் வித்துவான்களாயிருப்பவர் கோணல் குதர்கங்கள் கொண்டு மந்தமதிகளை வசீகரித்துக் கொள்ளுகிறார்கள். ஆகையால் அவர்களின் மதங்கள் பாமர ஜனங்களிடையே அதிகமாகப் ப்ரகாசம் அடைகின்றன. இப்படியான பின்பு, இதுதான் நல்ல வழி என்று தோன்ற ஆரம்பித்துவிடவே " இந்த மூட உலகம், சென்றாரைக் கண்மூடிக்கொண்டு பின்

மாயிரா நின்றது. पाषण्डागमங்களில் क्षुद्रங்களை विप्रलम्भार्थமாக निवेशिப்பித்தார்கள் என்னுமிடம் முன்பே சொன்னோம்.

मार्जारத்தை मतङ्गजமாக वर्णिப்பாரைப்போலே महाविद्यादिகளான சில अप्रतिष्ठितानुमानங் களைக்கொண்டு ஒரு समयத்தை प्रमाणமாக்கும்போது तुल्यन्यायத்தாலே எல்லாவற்றையும் प्रमाण மாக்கலாம். अङ्गपञ्चकहीनतैயாலே अप्रतिष्ठितங்களான तर्कங்களை இட்டொன்றை அழிக்கப் பார்க் கில் எல்லாவற்றையும் அழிக்கலாம். स्वमतस्तुतिயும் परमतनिन्दैயும் எங்குமுண்டானபடியாலே

चापलोदयसम्भवात् अतः सर्वेषु मतान्तरेषु सतां सर्वेषामपि दोषाणां कदाचिदप्यसर्वज्ञदुर्ज्ञेयतया वैदिक-पक्षपरिग्रहस्ते आशामोदकायत इत्यशंक्याह–इप्पडि इति । आयुः शेषेति । "नरस्य बाल्येकौमारे-क्रीडतोयातिविंशतिः" इति रीत्याऽव्युत्पन्नदशोपरि गुरुकुलक्लेशादिलालसतयापि किञ्चित्कालातिवाहने तदतिरिक्तायुः शेषै किमयं स्वमतपरिश्रमं कुर्यान् अथ परमतपरिशीलनमिति वक्तुमशक्यतया वैदिकमत श्रद्धासंवर्धनं दुष्करमेवेति तदभिमानः । ओरुवन्कश्चिदिति । "कश्चिद्विपश्चित्तम" इतिवत् अयमेता दृशाधिकारी सुतरांमृग्य एवेतिभावः । असिसूक्ष्मदोषेति । यद्यपि तत्तन्मतेऽतिसूक्ष्मान् दोषाम्शानस्मद्दे-शिकसदृशा मेधया एधमाना केचिदेव कृत्स्नशोजानीयुः । न सर्वे । तथापि—"वाचायुद्धे प्रवृत्तानाम् वाचैव प्रतिबोधनन्" इति वादस्यापि युद्धविशेषतयाऽवगमात् प्रसिद्धेयुद्धे यथाशत्रुशरीरेषु सूक्ष्मसिराद्य-नभिज्ञानेपि विजिगीषुणा प्रहरणादिकमादाय शत्रुशरीराणि विनिपात्यन्ते, तथैव परमतेषु सामान्यतो-दूषणीयांशमवगम्य तद्दूषणप्रक्रियां चाचार्यसकाशे यथावच्छ्रुत्वा ताम्प्रयुञ्जीत पुमान् विवेकीति न न किञ्चिदपहीनं स्वमतप्रतिष्ठितबुद्धितांम्प्रतीत्यर्थः ।

नन्वेवं सति सर्वेपि परमताद्विरमेरन् रमेरंश्चवैदिकमार्ग इत्यत्र केषांञ्चिद्भाग्यहान्या न तथा सम्वृत्तमिति दर्शयन् परमतानां बल्वजतुल्यताञ्चाहाधिकारान्तिमगाधया–मोण्डुमिति । सुसमाधेयान्–अथवा–अप्रतिष्ठितान् दुस्तर्कानाश्रित्य यथामनीषितं स्वाभिमतार्थान् प्रतिजिह्वाजल्पनं कुर्वन्ति । प्रत्यक्षतोधिगतार्थवैपरीत्येनस्वमतमुद्घोषयन्ति अदृष्टचरं दूषणं वेदेष्वारोपयन्ति । प्रागहमेव सर्वज्ञ एतद्विज्ञायावोचमिति केनचिदुक्तमतिमात्रं विश्वस्य बहुधार्थकामाद्युपाधितस्तदुक्तमतेष्वनुप्रविशन्ति । तत्र हि कारणम्–ते श्रमहरनीलमेघनिभनिजविग्रहस्य आश्चर्यनवनीतनाट्यस्य भगवतः क्वणन्नूपुरपाद-

பற்றுகிறது. உண்மையை ஆராய்வதில்லை.'' என்றும், ''முதன் முதலில் ஒருவனை ஒரு மூடன் பூஜிக்க ஆரம்பித்தால், மற்ற மூர்க்கர்களும் அவனையே பூஜிப்பார்கள்.'' என்றும் சொல்லுகிற படி ஒரு குருட்டுவழி (அந்த பரம்பரை) தோன்றிவிடுகிறது. நமது வேத ஸம்பிரதாயத்தில் இவ்விதமான ஒரு தந்தனப் போக்குக் காட்ட முடியாது. இது எல்லோருமறிந்த பஹிரங்க ரஹஸியம். ஆகையால் நமது வேத ஸூரிய வெளிச்சத்தில், விபரீதமான பிறர் மதங்கள் இருட்டென வெருட் டென்று ஓடிவிடும்.

இப்படி வைதிக மதம் ஒன்றைமட்டும் பற்றிக்கொண்டு, மற்றுள்ள ஸமயங்களை எல்லாம் தள்ளப்போமோ? வைதிகர்களான மஹர்ஷிகளே, ஸமய நிஷ்டா நியமங்களை அநுஸரிக்கவேணு மென்றும், அநுஸரியாதாரை ராஜா தண்டிக்க வேண்டும் என்றும் சொல்லியிருக்கவில்லையோ? ஆகையாலே எல்லா மதங்களும் பிராமாணங்கள் என்றே கூறவேண்டும் என்னில்—அன்று. எல்லா

இத்தாலும் ஒன்றுக்கு उत्कर्षம் சொல்லவொண்ணுது. ग्रन्थभूयस्त्वादिகளாலே ஒன்றிலே चमत्कारம் பண்ணப் பார்க்கில் அப்போதும் अनन्तங்களாய் अनन्त परिकरங்களையும் உடைத்தான वेदங்களுக்கு மிகவும் चमत्कारहेतुत्वமுண்டாய். महाभारतத்திலே साम्ख्ययोगங்களை महर्षि பலகாலும் प्रशंसिக்கச் செய்தே—" बहवः पुरुषा राजन् साङ्ख्ययोग विचारिणः । नैत इच्छन्ति पुरुषमेकं कुरुकुलोद्वह ।। समासतस्तु यन्व्यासः पुरुषैकात्म्यमुक्तवान् । तत्तेहं सम्प्रवक्ष्यामि प्रसाददमितौजसः ।। इत्यादिகளாலே विरुद्धाम्शமுண்டென்று காட்டினன். पाशुपतம் तामसमोहनार्थமாக प्रवृत्तமென்னுமிடம். गौतम- शापादिविषय बहुपुराण प्रसिद्धம்,

---

पद्मपरिचर्याभाग्यविधुरा भवन्तीत्येतदेवेति तदर्थः । अथवा—वेण्डुङ्गालित्यादेः—कस्यचित् साधनावसरे साधनीयार्थमेव तत्र हेतूकुर्वन्तीत्यर्थः । अनेन हेतोः साध्याविशिष्टतयाऽसिद्धिदोषः सूच्यते । अत्र कार्ष्ण्य गुणेन लक्ष्मीविद्युदुल्लसिततया कारुण्याम्मयत्वेन च मेघसाम्यं भगवद्विग्रहस्य । साम्येपिवैषम्यञ्च वर्तते । मेघोवृष्ट्वारिक्तः श्वेतश्च भवति क्षणलक्ष्यविद्युत् । कृष्णमेघस्तु तद्विपरीतः।। एतादृशविग्रहशोभां प्रदर्श्यनवनीतकुम्भान् शिरसिकृत्वाश्चर्यमयनटनेनवल्लवीचक्र मनोहारिचक्रवर्तित्वं भगवतोऽभिप्रेममिह । भगवत्पादपद्मयोर्नूपुरक्वणनमसकृच्छ्रोतुमेव महान्तः भगवन्मन्दिरपरिसरेषु निवसन्ति । तदुक्तं पादुका- सहस्रे—" आर्तध्वनेरुचितमुत्तरमन्तकाले कर्णेषु मञ्जुनिनदेन करिष्यसीति । वासं भजन्ति कृतिनोमणि- पादरक्षे ! पुण्येषु देवि ! पुळिनेषु मरुद्वृधाया इति ।। अथवा तेन शब्देनात्राधिकार उक्तरीत्या मतान्तराण्यनुप्रविशतोदुर्भगान्—मामैवम् , त्यजत दुराग्रहमिति वारयतीवपादुका । तदप्युक्तं तत्रैव— मानेषु दानवरिपोर्मणिपादरक्षे ! त्वामाश्रितेषु निगमेष्ववधीरितेषु । मञ्जुस्वनैर्वदसिमैवमितीवमातः ! वेलां लिलङ्घयिषतोमनुजान्निरोद्धुमिति ।

वेदाः प्रमाणं तदनुस्मृतीनां ततिश्चमानं तदनुग्रहाय ।
बुद्धार्हदादेः समयास्तु सर्वेतद्व्याहतेर्नैवपदं प्रमायाः ।। १ ।।
इति वेदविधि प्रतीपगत्या विविधोत्प्रेक्षित वादिपक्षवर्गे ।
निशितं समुदायदोषशङ्कुं निचखानाद्य गुरूत्तमोविमृश्य ।। २ ।।

इति श्रीवत्सवंशायनस्य देशिकचरणपरायणस्य नारायणस्य कृतिषु परमतभङ्गव्याख्यायां देशिकाशय प्रकाशाख्यायां पञ्चमः समुदायदोषाधिकारः समाप्तः ।। ५ ।।

---

மதங்களையும் காக்கவேணும் என்று மஹர்ஷிகள் சொன்னது—பாஷண்டிகளின் வேஷபாஷாதி விஷயமன்று. பொதுவில் தர்மானுஷ்டானத்திற்காக வாரம் நாழிகைகளின் கணக்கு முதலியன போல பொதுவில் மஹர்ஷிகளே ஏற்படுத்திய சில தர்மங்கள் பாஷண்டிகளிடையேயுமுண்டு. மடம் கட்டி வழிபடுதல், சிஷ்யர்கள் போதனை, அன்னதானம் முதலியன. அவைகளைத் தப்பாமல் ராஜா காக்கவேணும் என்றுதான் அதற்குக் கருத்து தர்ம சர்ஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. இங்ஙனல் லாதபோது—''பாஷண்டிகளையும், கர்ம ப்ரஷ்டர்களையும், நயவஞ்சகர்களையும், முரடர்களையும், குயுக்தி கேட்பவர்களையும், கொக்குபோல் ஸமயம் பார்த்திருப்பவரையும் பேச்சிலும் மரியாதைக் காட்டி ஆதரிக்கலாகாது. கர்மப்ரஷ்டர்களோடு பேசவும்கூடாது'' என்றும் ''கடவுளை வெறுக்கும் சமணர், தலைமழித்த சைவர், தர்மாநுஷ்டானமில்லாத பௌத்தர் இவர்கள் பேச்சு ஸாத்துவிகர் களுக்கு பொறுக்கவரியனவாக இருக்கும் என்றும் மஹர்ஷிகளும் ஆழ்வாரும் அருளியுள்ளது பொருந்தாது.''

"பாஞ்சராத்ரம் முழுப்ரமாணம்."

श्रीपाञ्चरात्रத்துக்கு वेदविरोधமில்லை என்றும் இது कृत्स्नமும் प्रमाणமென்றும் "भविष्यति प्रमाणं वै एतदेवानुशासनम्" इत्यादिகளாலே பல இடங்களிலும் प्रपञ्चिचத்தான். शारीरकத்திலும் साङ्ख्यादिमतங்களில் वेदविरुद्धांशங்களை எல்லாம் எடுத்து दूषिத்து श्रीपाञ्चरात्रத்துக்கு அவற்றுக் குப்போலே वेदविरोधமில்லாமையாலே இத்தால் वेदத்துக்கு प्रतिरोधமில்லை என்று साधिத்தான். परपक्ष दूषण प्रकरणத்திலே पाञ्चरात्रமும் वेदविरुद्धமென்று சொல்லும் परपक्षத்தையே கழித்தானா யிற்று. ஆகையால் "यथागमं यथान्यायं निष्ठा नारायणः परः" என்றதற்கு सर्ववेदान्तानुगुण समीचीनन्यायोपबृह्मणविशेषங்களைக்கொண்டு அவ்வோ आगमங்களை तत्त्वविषयத்திலே प्रकृतिपुरुष पशुपति प्रभृति सर्वतत्त्वान्तर्यामिயான नारायणपरங்களாக निर्वहिக்க शक्यமென்று तात्पर्यம். அல்லது वेदवैदिकमत विरुद्धाचारादि प्रतिपादक भागமெல்லாம் अनुज्ञातமாகிறன்று.

"பிறமதங்கள் பல பலவாயினும் அவற்றைப் பொதுவாக கண்டிக்கும் விதம்"

இப்படி वेदविरुद्ध समयங்கள் अनादरणीयங்களானாலும் அவற்றுக்குள்ள दोषங்களை எல்லாம் अनुसन्धिக்கப் பார்த்தால் அவற்றில் ஓரொன்றைத் தெளியக் கற்குமளவிலே आयुश्शेषம் கழியும் படியாயிருக்க ஒருவனிந்த वैदिकपक्षத்திலே दृढप्रतिष्ठितबुद्धिயாம்படி என்? என்னில்— परपक्षங்களில் अतिसूक्ष्मदोष विशेषங்களை அறிந்திலனாகிலும் शत्रुவின் शरीरத்திலே सिरादिविशेषங் களை அறியாதிருக்க आयुधादिகளாலே அத்தை निरसिக்குமாப்போலே प्रधानदूष्यांशத்தைத் தெளியக் கற்று प्रधानदूषणांशத்தையும் तत्त्वविदाचार्योपदेशத்தாலே தெளிந்து விலக்கடிகளைவிட்டு सत्पथप्रवृत्तனாகக் குறையில்லை.

மீண்டுரைக்க விரகுதரும் தருக்கம் கொண்டே
வேண்டுங்கால் வேண்டுவதே விளம்புகின்றார்
கண்டதற்கு விபரீதம் கத்துகின்றார்
காணாதகுறை மறையில்காட்ட நிற்பார்
பண்டொருத்தன் கண்டுரைத்தேன் நானேஎன்னப்
பலவகையிலுபாதிகளால் படிந்து வீழ்வார்
கொண்டலொக்கும் திருமேனி மாயக்கூத்தன்
குரைகழல் சேர்விதிவகையில் கூடாதாரே.

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्र स्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु परमतभङ्गे समुदायदोषाधिकारः पञ्चमः समाप्तः ॥ ५ ॥

——: o :——

ஆனாலும், ஆழ்வார்கள், ''பிணக்கின்றி ஆறுவகை ஸித்தாந்தங்களையும் வழிகண்டு உரைத்தான் கணக்கற்ற குணநலமுடைய எம்பெருமான்'' என்றும், சைவர்கள், சமணர்கள், சாக்கிய பௌத்தர்கள் மற்றும் மதத்தவர் சொல்லும் எல்லாத் தெய்வமுமாகி நின்றான் எங்கள் பெருமான் என்றும், ''ஏதும் எங்கும் பொய்யில்லை. போற்றுமின்கள்'' என்றும் அருளிச் செய்யவில்லையோ என்றால்—அதற்கும் மறுமொழி கேளுங்கள். இவை எல்லாம் ஒரே ஸமயத்தில் பிரமாணங்கள் என்னுதல் பொருந்தாது. ஒன்றோடொன்று முரணுதலால். வேதத்தோடும் விரோதிப்பதால், ஆகையால் பாக்கியஹீந பிரஜைகளின் கர்மங்களுக்கீடாக அவ்வோ ஸமயங்களைப் பரப்பி, அவற்றால் வைதிகர்களுக்குக் கலக்கம் வாராதபடியும் பார்த்து, வேதங்களைக்கொண்டு நல்வழி காட்டி நடத்திப் போகிறான் ஸர்வேச்வரன். அவனை அவரவர் சாஸ்திரப்படி முடிந்தவரை ஏத்தித் தொழுது அவன் மூலமாக கோரின பலன்களைப் பெறுங்கள் என்றுதான் அவற்றுக்குக் கருத்து. அதனால்தான் ஆழ்வார்கள்—மற்ற சமயங்களால் உன்னை அடையமாட்டார்கள் என்றும் அவைகளால் உன்னை அறிய முடியாது என்றும், மற்ற விடங்களில் கூறிப்போந்தார்கள்.

ஆயினும் மஹாபாரதாதிகளில்—ஸாங்கிய யோகாதி சாஸ்திரங்களை ப்ரஸ்தாபித்து—இவைகளும் பிரமாணங்களே, ஹேதுவாதங்களால் அழிக்கக்கூடாதவை என்று புகழ்ந்துரைக்கக் காரணமென்னவென்றால்-ஆம், யுக்தி வாதங்கள் செய்து இவைகளைத் தகர்க்கக்கூடாதென்று அங்கு கூறியுள்ளது பொருத்தமே. காணாத பரலோகாதி விஷயத்தில் யுக்திக்கு மறுக்கவோ, ஸ்தாபிக்கவோ சக்தி கிடையாதல்லவா? இதில் ஏதும் தவறில்லை. ஆயினும் குற்றமேதுமற்ற வேதங்களோடு முன் சொன்ன புருஷர்கள் கட்டிய சாஸ்திரங்கள் முரணில், வேதங்களாலே இவை முடக்கப்படும் என்பதையும் ஒத்துக் கொள்ளவே வேண்டும். இப்படியாயின் முன்சொன்ன ஸாங்கிய யோகாதி சாஸ்திரங்களைக் குறிப்பிட்டு, இவைகள் ஒரே கருத்துடையனவா? வேறு வேறு கருத்துடையனவா என்று அங்கேயே கேள்வி கேட்டு, அறிவுக்கு ஸாதனமாகிய இந்த சாஸ்திரங்களில் வேதம் நீதி இவைகளையொட்டி பரம காரணமாகிய நாராயணனே இவற்றுக்கு கருத்தாவான் என்று அவைகளையும் பிரமாணங்களாகக் கூறவில்லையோ அது கூடுமோ? ''ஜனங்களுக்கு அவ்வோ பல ஸித்திக்காக பல ஆகமங்களால் பல வழிகள் கூறப்பட்டுள்ளன. ஆயினும் கங்கையின் அனைத்துப் பிரவாஹங்களும் கடலில் கலப்பதுபோல் அவைகள் எல்லாம் உன்னில்தான் வந்து முடிவடைகின்றன என்று மஹாகவியும் எல்லாம் பிரமாணங்களே என்று முடிவுகட்டவில்லையோ? என்னில்—கவனித்துக்கேள். அவ்விடத்திலேயே மற்றை ஸாங்கியாதி ஆகமங்கள் கபிலர் முதலிய சில மஹர்ஷிகளால் செய்யப்பட்டவை என்று கூறி, அதே இடத்தில் அவாந்தரதபஸ் என்னும் பகவானுடைய ஓர் அவதாரம் வேதங்களுக்கு பிரவசன ஆசாரியர் ஆவர் என்றும் கூறியுள்ளபடியால், வேதங்கள் அபௌருஷேயங்களானவை, மற்றவை அப்படிப்பட்டவை அல்ல என்று குறிப்பால் உணர்த்துகையாலே, வேதங்களோடு விரோதிக்கும் மற்ற ஆகம பிரதேசங்கள் பிரமாணங்கள் ஆகமாட்டா என்று தேரும்.''

ஆனாலும்—''யுக்திகளுக்கு எல்லை இல்லை. சுருதி வாக்கியங்களோ பலவாறு கூறுகின்றன'' என்று பாரதாதிகளில் வேதங்களுக்குள்ளேயே முரணுண்டு என்று கூறியுள்ளபடியே—மற்றை ஆகமங்களும் வேதங்களோடு முரணும்போது ஏதாவது பரிஹாரம் சொல்லி எல்லாம் பிரமாணங்களே என்று ஆகாதா என்று சிலர் கேட்பர். அதுவும் சரியன்று. தத்துவ விஷயங்களை இருவிதமாகப்

பேசக்கூடாது. அந்தந்த மதக்காரர்களே வேதங்களிற்போல கருத்து வேறுபாட்டாலே பரிஹாரம் சொல்ல முடியாதபடி யுக்திகளை உறுதியாகக்கூறி முரண்பாட்டை வளர்த்துப் போயிருக்கிறார்கள். வேதங்களிற்போலே செய்முறையில் வேறுபாடு கூறவேணுமானால்—மதங்களுக்கு காரணக் குற்றம் ஏதுமில்லை என்றாகி, பிரமாணங்களே என்றும் நிச்சயமாகி, உள்நோக்கு ஏதுமில்லாத பொது ஜனங்களின் அபிமானம் ஸித்திக்கவேணும். எல்லா ஸமயங்களும்—வேதங்களுள் சாகைகளின்—ஸூத்திரங்களின் வேறுபாடுபோல் வேறுபட்டனவேயன்றி, பிரிதொன்றுமில்லை என்றால்—அப்போது—அவைகளை ஒத்துக்கொள்ள வைதிகர்கள் விவாதிப்பதும், பஹிஷ்கரிப்பதும், பாஷண்டிகள் என்று வெறுப்பதும் கூடாதபடியாம். வேதம் தவிர எல்லா மதங்களும் பிரமாணங்கள் என்று பிறர் எல்லோரும் ஒப்புக்கொள்ளவுமில்லை. பரலோக விஷயத்தில் ஜைனர் பௌத்தர் முதலியவர்களுள் ஒருவரை—நல்லவர் என்று நம்புவதற்கு விசேஷ காரணமும் இல்லை.

புத்தி கூர்மையுள்ளவர் பலர்கூடி ஏற்றுக்கொண்டதே பிரமாணம் என்று நம்புவோமெனில்—அப்போதும்—தேசங்கள் தோறும்—காலங்கள் தோறும்—புத்தியின் வழி மாறிப்போவதால்—அவரவர் ஒன்றை விடுவதும், ஒன்றைப் பற்றுவதும் இடையறாது நடப்பதால் எல்லாம் அப்பிர மாணங்களேயாகும். முன் ஜன்மத்தின் துஷ்கர்ம வாஸனையாலோ இப்போது துஷ்ட ஸஹவாஸத் தாலோ ருசியும் அபிமானமும் மாறிப்போய் மதாந்தரங்களில் ஒன்றை பிரமாணம் என்று பற்றிக் கொள்வர் சிலர். வைதிக கர்மாநுஷ்டானங்களுக்கு அலைந்து பயந்து வேதம் தவிர ஏதேனும் ஒரு மதமே அமையும் என்பர் சிலர். அவர்களெல்லாம் வரவர கர்மாநுஷ்டானம் குறைந்து சோம்பராகி முடிவில் சார்வாகப்ராயராகி மடிவர். பிறர் சொன்ன சில கார்யங்கள் பலிக்கக் காண்கையாலே அவற்றோடு சேர்ந்து அவர்கள் சொன்னதத்தனையும் பிரமாணம் என்று கொள்ளுவதானால்—இவ்விதமே வேதங்களிலும் காணப்படுகையாலே இதனாலே ஒரு வாசியும் ஏற்படாது. பிறர் தமது மதங்களில் வேதங்களிலிருந்து சில சில்லரை மந்திரங்களையும் கர்மாக்களையும் எடுத்துக் கூட்டியுள் ளார்கள் என்று முன்பே இங்கு கூறியுள்ளோம். பூனையை யானையாக் வர்ணிப்பதுபோல—சில குயுக்திகளாலே ஒரு மதத்தை பிரமாணமாக்கினால்—அப்போது—எல்லா மதங்களையும் அப்படி யாக்கலாம். வழிமுறைகள் அற்ற குயுக்திகளாலே ஒரு மதத்தை அழிக்கப் பார்த்தால் எல்லாவற் றையும் அழிக்கலாம். தந்தாம் மதங்களைப் புகழ்வதும், பிற மதங்களைத் தூற்றுவதும் எங்கும் உண்டாகையாலே இதை ஓர் சிறப்பளவாய்ச் சொல்லவொண்ணாது. நூற்களின் பரப்பளவைக் கொண்டு பிறமதங்களில் செவ்வை சொல்லப் பார்த்தால்—அப்போதும்—தாமும் அனந்தங்களாய் அனந்த அங்கங்களையும் உடையதாய் இருக்கும் வேதமார்க்கங்களில் மிகவும் செவ்வை சொன்ன தாகும். மஹாபாரதத்தில்—ஸாங்கிய யோகாதி மதங்களில் பரமாத்மாவை மூலகாரணமாக ஒப்ப வில்லை என்றும், வியாஸர் வேதானுஸாரியான தமது ஸூத்திரங்களில் புருஷோத்தமனின் அந்தர்யாமித்துவத்தை கூறியுள்ளார் என்றும் சொல்லி பிறமதங்களில் வேத விரோதம் உண்டு என்று காட்டப்பட்டுள்ளது. பாசுபத மதம் தாமஸஸ்வபாவர்களைக் கலக்குவதற்காகவே உண்டாக் கப்பட்டது என்று கௌதம ரிஷியின் சாப பலத்தை விவரிக்கும் பல புராணங்களில் கூறப்படுகிறது.

ஸ்ரீபாஞ்சராத்ரம் அவ்விதமல்லாது—முழுமையும் பிரமாணமாகும் என்றும், அதில் வேத விரோதம் கிடையாது என்றும் பாரதத்திலேயே பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. வேதாந்த ஸூத்திரத்தில்—ஸாங்கியாதி ஸமயங்களின் வேத விரோதத்தை எடுத்துக்காட்டி ஸ்ரீபாஞ்சராத் ரத்துக்கு அவ்வாறில்லை என்று காட்டப்பட்டது. அங்கு பிரமதங்களைக் கண்டிக்குமிடத்தில்—

பாஞ்சராத்ரம் வேத விரோதி என்ற பரமதத்தையும் கழித்ததாயிற்று. ஆகையால அவவோ ஆகமங்களில் தத்துவ பரஸ்தாவமுள்ளவிடங்களில், வேதம் அது சொன்ன நீதி, அதன் வியாக்கி யானம் இவைகளையொட்டி அங்கு கூறப்பட்ட பிரக்ருதி புருஷ பசுபதி முதலியவற்றுக்கு அந்தர்யாமி நாராயணனே என்று நிர்வாஹம் கொள்ளவேணும் என்றே பாரதத்தின் கருத்தாகும். அங்ஙனல்லாது எல்லா சமயங்களிலும் கூறப்பட்ட வேதவிருத்தமான அநுஷ்டானங்களெல்லாம் ஏற்கத்தக்கன என்று கருத்தல்ல.

இப்படி வைதிக ஸமயம் தவிர மற்ற விருத்த மதங்கள் அனைத்தும் அநாதரிக்கத்தக்கன என்ருலும்—அவற்றுக்குள்ள தோஷங்கள் அத்தனையும் நம்மால் எண்ணப்போமோ? அவற்றுள் ஓரொன்றைத் தெளியக் கற்கவே நமது ஆயுள் அளவு போதாதே? ஆகையால் ஒருவன் இந்த வைதிக பக்ஷத்தில் எப்படி ஊன்றி நிற்பான்? என்னில்—ஆம்! அது முடியாததேயாயினும் யுத்தத்தில் விரோதியின் சரீரத்தின் உள் நரம்பு முதலியவைகளை அறியாவிடினும் ஓர் வீரன் எப்படி மொத்தமாக ஒரு ஆயுதத்தை வீசி விரோதியை ஒழிப்பானே—அப்படியே—இங்கும் பிற மதங் களுடைய முக்கியமான குற்றங்களைத் தெளியக் கற்று, அவைகளைக் களைந்தெறியும் விதத்தையும் தத்துவவித்தான ஆசார்யோபதேசத்தாலே புரிந்துகொண்டு, விலக்கடிகளைவிட்டு நல்வழியே நடக்கக் குறையில்லை.

(பாசுரத்தின் கருத்து) மேன்மேலும் சொல்ல இடம் தந்து, வளர்ந்துபோகும் வீண்வாதங்கள் பேசி, வேண்டினபோது வேண்டினபடியெல்லாம் சொல்லி, உலகில் கண்டபடிக்கு விருத்தமாகச் சுத்திக் குழப்புகிருர்கள் பிறர், ஆதிநாளில் நான் கண்டு இம்மதத்தை உண்டாக்கினேன் என்று ஒருவன் சொன்னதை நம்பி, பணம் முதலிய இஹலோக சுகத்திற்காக அதில் படிந்து விழுகிருர்கள். அவர்களுக்கு ஒருக்காலும்—நீலமேக ச்யாமளாகாரனுய் வெண்ணெக்குடக் கூத்தாடினவனுய் உள்ள எம்பெருமானின் தண்டையார்ந்த திருவடி நிழல் சேரும் விதிவகை கைகூடாதபடியாம்.

இங்ஙனம் ஸமுதாய தோஷாதிகாரத்தின் தமிழ் பொழிப்புரை முற்றும்.

—— : o :——

என்னென்ஜே பிரிண்டர்ஸ், 382, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை - 600 005.

॥ श्रीः ॥



॥ श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः ॥

श्रीमते रामानुजाय नमः ॥ श्रीमते वेदान्तगुरवे नमः

श्रीमान्वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी । वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

# परमतभङ्गे लोकायतिकभङ्गाधिकारः - 6

*கண்டது மெய்யெனில் காணும் மறையில் அறிவு கண்டோம்,*
*கண்டதலாததிலதெனில் கண்டிலம் குற்றமிதில்,*
*கண்டதுபோல் மறைகாட்டுவதும் கண்டதொத்ததனல்*
*உண்டது கேட்கும் உலோகாயதர் இ[எ]ன்று மீறுவதே, (12)*

---

श्रीः

श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः

## ॥ * ॥ देशिकाशयप्रकाशः परमतभङ्गव्याख्या ॥ * ॥

विशुद्धज्ञानवैराग्यमूर्तयेऽनन्तकीर्तये । तस्मै नमोऽस्तु कस्मैचिन्निगमान्तार्यसूरये ॥

चार्वाकतन्त्रदमनोचितचारुवाकान् मह्यं दिशन्तु विशदाशयदेशिकेन्द्राः ।
यत्सूक्तिसेवनसुधां हि बुधा निपीय नाकाधिरोहणदशामपि नाद्रियन्ते ॥

लोकायतमतभङ्गं कृत्स्नतदुक्तीर्विमृश्य तन्वानः । पद्मायताक्षचित्तो वित्तो वेदान्तदेशिको जयतु ॥

अथ "इष्टं हि विदुषां लोके समासव्यासधारण"मिति रीत्या पूर्वं समुदायतः परेषां प्रक्रियासु प्रतिक्षिप्तास्वपि प्रत्येकं ता अत्र निराक्रियन्ते । संकुलयुद्धानन्तरं द्वन्द्वयुद्धप्रारम्भवत् । यद्यपि पूर्वाधिकारान्ते मितायुषा मनुजेन एकैकशः परेषां दूषणकथनमशक्यमिति शत्रुशरीरे सूक्ष्म सिराद्यनभिज्ञत्वेऽपि मुद्गराद्यभिघातवत् समुदायतः प्रधानांशविमर्दनेन परमतानि परास्तानि भवन्तीति दर्शितम् , तथापि शक्तेनात्यन्तमभिनिवि नाधिकारिणा प्रत्येकदूषणान्यपि प्रकाश्यानीति पुनरारम्भः । "ततो दुर्योधनं हत्वा भीमसेनः प्रतापवान् । ................. शिरश्च राजसिंहस्य पादेन समपोथयत्" इति पिष्टमेव पिंषन् शत्रौ प्रज्वलितहृदयो भीमोऽत्र निदर्शनम् । भाषितं हि "अलमनेन दिष्टहतमुद्गराभिघातेने"ति । अथवा निश्शेषकौरवनाशानन्तरमप्यश्वत्थामोत्थानवत् शत्रुपक्षपातिनां

केषांचित् प्रत्युत्थानशङ्कया पुनरारम्भः । तथाच तत्त्वटीका :– "बाधितं त्विह निर्बाधं साधितन्त्व प्रतिक्रियम् । तथापि पुनरारम्भश्शङ्काशेषविमर्दवत्" इति ॥

ननु पूर्वाधिकारान्ते मतान्तरेषु वेदविरोधः प्रधानतयोद्भावितः । सोऽस्मान्न संस्पृशति । प्रत्यक्षमात्रप्रामाण्यवादिनां अप्रमाणभूततद्विरोधस्याकिंचित्करत्वात् इत्याक्षिपन्तं चार्वाकं तन्मतरीत्यैव वेदप्रामाण्यं स्वीकारयति கண்டது மெய்யெனிலிதி. एतेन पूर्वोत्तरयोः प्रकरणयोस्सङ्गतिरप्याक्षेपरूपा सन्दर्शिताभूत् । प्रत्यक्षितं यत् तदेव प्रामाणिकमिति हि तव स्थितिः, तथाचेद्वेदस्य श्रोत्रेण, तदर्थधियश्च मनसा स्वयंप्रकाशप्रत्यक्षेण वा प्रमितत्वात्प्रामाणिकत्वमवर्जनीयमिति प्रथम पादार्थः । ननु दुष्टश्शब्दो न प्रमाणम्, वेदश्च तथा । वक्तृदोषादिभ्य इत्यत्र तं विनयति वेद प्रामाण्यं கண்டதலாதது இலது எனிலிதி. एवमेव पाठः पदच्छेदश्च भाव्यौ । प्रकारान्तराणामसामञ्जस्यस्य सुहत्वात् । यदनुपलब्धं तन्नास्तीति खलु तव प्रतिपत्तिः, तथैव स्थित्वा पश्यसि चेत् अस्मदागमेषु न कमपि दोषं पश्यामः । ततस्ते न सन्त्येवेति सिद्धं नस्समीहितमिति द्वितीय पादस्य । ततश्च फलितं प्रदर्शयति கண்டதுபோலிதி. अस्मदध्यक्षितमिव वेदबोधितमपि, क्वचित्प्रत्यक्षार्थतुल्यत्वात् परमार्थ एवेति तृतीयपादस्य । अथ प्रत्यक्षमेव प्रमाणमिति शवमुष्टिवत् गृहीत ग्राहिता शनैर्मुक्त्वा कचित्क्वचिदनुमानशब्दयोरपि तत्त्वमङ्गीकुर्वन्नयं केन नाम कारणेन श्रुतेस्सुभगा भिक्षुकन्यायात्तत्त्वं प्रतिषेधति । न विद्मो वयमिति विलीयन्त आचार्याः உண்டது கேட்குமிதி. अस्य च खण्डस्य भोजनेन क्षुन्निवृत्तिस्तया च मुखप्रसाद इति हेतुहेतुमद्भावमूलां व्याप्तिमवधार्य, मित्रस्य मुखविकासेन भोजनाद्यनुमाय, तत्संवादाय "किं त्वमभुङ्क्था" इति तत् पृच्छन्नित्यर्थः । एवं "அது உண்டு (என்று) கேட்கும்" इतिपदच्छेदान्वयौ कृत्वा "तदस्तीति वाक्यादाप्तोक्तात् श्रुतान्निश्शङ्कं प्रवर्तमान इत्यप्यर्थो बोध्यः । केचित्तु स्वभुक्तान्नस्य रसविपाकादिकं स्वयमजानन्

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: | ஸ்ரீமதே வேதாந்தகுரவே நம:

## பரமதபங்கத்தில் லோகாயதிகபங்காதிகாரம் - 6

(பாட்டின் கருத்து) ப்ரத்யக்ஷத்தினால் அறிந்ததொன்றே உண்மை என்றாலும் வேதங்களையும் அதனால் உண்டான ஜ்ஞானத்தையும் ப்ரத்யக்ஷமாகக் காண்கிறோம். காணாத பொருளில்லையாம் என்றாலும் வேதங்களில் குற்றமொன்றும் காண்கிறிலோம். நேரில் கண்டதுபோல் மறை விளக்கும் பொருளும் கண்டதோடு ஒத்திருக்கிறது. ஆகையால் அது உண்டு என்று ஆப்த வசநத்தைக் கேட்டு நம்பிக்கை கொள்ளும் உலகாயதர் இன்று வேத ப்ராமாண்யத்தை மீறுவதே.

லோகாயதமதத்தில் ப்ரமாணவ்யவஸ்தை

उक्तप्रकारத்தாலே निस्सारங்களாய் வைத்து मन्दमतिमोहनங்களான बाह्य कुदृष्टिमतங்களில் முற்பட लोकायतिकसिद्धान्तத்தை अनुवदित्तु दूषिக்கிறோம். அவர்கள் சொல்லும்படி

पार्श्वस्थानयं पृच्छतीत्यत्यन्तमौढ्यं द्योत्यते तस्येति व्याकुर्वन्ति । तन्न । आरम्भगाथायां वक्ष्यमाणार्थविवक्षाया एवोचितत्वात् । अस्याग्रेऽनुक्तेः । अस्मदीयार्थद्वयस्योक्तेश्च । "உண்டால் பசி கெடும்" "आप्तवाक्यத்தை विश्वसित्तु" इत्यादौ ।

ननु पूर्वनिरूपितदिशैव सिद्धान्तान्तराणां निस्सारत्वनिर्णयात् किमन्यदत्र करणीयमवशिष्यते । अथापि वा क्रियतां भगवद्बादरायणवत् बौद्धादीनामेव निराकरणम् । न हि स चार्वाकं निराचकारेत्यत्राह उक्तप्रकारத்தாலே इति । जीवतत्वाधिकाराद्युक्तरीत्येत्यर्थः । निस्सारங்களாய் வைத்து इति । निस्सारत्वनिर्णयोपीत्यर्थः । मन्दमतीति । तथा च प्रौढा यद्यपि दर्शितदिशैव चार्वाकादिवञ्चनानि विना पृथग्वचनं जानीयुः, तथापि मितंपचाश्चापलायप्रचोदिताश्चार्वाकाद्याश्रित्य विध्वंसेरन्निति, युक्तस्तदर्थं प्रकरणप्रक्रम इत्याशयः । बाह्येति । वेदप्रामाण्यप्रतिषेद्धारो बाह्याः । वैदिकं पन्थानमनुरुन्धाना अपि तत्तदर्थेषु कुत्सितां दृष्टिं कुर्वन्तः कुदृष्टय इति द्विविधा हि वादिन इत्यर्थः । "या वेदबाह्यास्स्मृतयो याश्च काश्च कुदृष्टयः । सर्वास्ता निष्फलाः प्रेत्य तमोनिष्ठा हि तास्स्मृताः" इति वचनात् । முற்பட - प्रथमं । तथाच मतान्तरेभ्योऽस्यातिस्थूलतया सूचीकटाहन्यायेन सुनिरसत्वात् प्रथमप्रमाणभूतप्रत्यक्षमात्रोपजीवनाच्च प्राथम्यं प्राप्तमित्याशयः । अत एव हि सर्वदर्शनसंग्रहादिषु चार्वाकस्यैवानुवादखण्डनादिकं प्रथमं दृश्यते । श्रीरङ्गराजस्तवादिष्वपि चार्वाकोपक्रमत्वं परमतनिराकरणस्य बोध्यम् । वेदान्तसूत्रकारास्तु प्रधानमल्लनिबर्हणन्यायात् बौद्धभङ्गेनैव चार्वाकादिसचूर्णनस्य कृतकरत्वममंसत । तथाच अधिकरणसारावलीः- "योगात्सांख्यव्युदासात् कणचरदमनादक्षपादानुयाताः बौद्धोन्माथेन लोकायतमुषितधियो जैनभङ्गात्तदुत्थाः । पत्युस्तन्त्रे पशूनां प्रकटितविहतौ तादृशापष्ठनिष्ठा ध्वस्तास्तुल्यतर्कागमशरणतया साकमस्मिन् कुदृग्भिः" इति । एवमुक्तप्राथम्ये हेतुगर्भं विशेषणमाह लोकायतिकेति । लोकेष्वायतं-लोकायतम् । विस्तृतमित्यर्थः । "स्वर्गानुभूतिर्मृष्टाशिर्ष्योष्टवर्षवधूगमः । सूक्ष्मवस्त्रसुगन्धस्रक्चन्दनादिनिषेवणम्" इति तन्मतानुमतभोगस्याद्ययावत् प्रायस्सर्वैरादियमाणत्वात् तन्मतस्य प्राथम्यमिति भावः । अष्टवर्षवधूः- षोडशवयस्का बालेत्यर्थः । बाला स्यात् षोडशाब्दा तदुपरि तरुणीत्युक्तेः । "सततं सेव्यमानापि बाला वर्धयते बल मित्यतो बालाग्रहणम् । तदस्यास्तीति लोकायतिकः । ठन् प्रत्ययः । केचित्तु तदधीतेवेत्ति वेत्यर्थे ठक् प्रत्ययमाहुः । तन्न । तथासति लौकायतिकेत्यादिवृद्धिप्रसङ्गात् । अथवा मूल एव तथा पाठोऽस्तु । तदा ठक्प्रत्ययोप्युपपद्यते । लोकायतेत्यनुक्त्वा

யெதென்றில், प्रत्यक्षமொன்றுமே प्रमाणம். அதுதன்னிலும் करणदोषादिகள் உள்ளது प्रमाणம் அன்று என்னுமிடம் सर्वसंप्रतिपन्नम्। अनुमानादिகளிலே சிலவற்றை यादृच्छिक संवादத்தாலே

---

लोकायतिकेत्यधिकोपादानात् । "अथ लोकायतं" इत्यादिसूत्रोक्तार्थैस्सहाधिकतया तद्भाष्यकर्तृ चार्वाकाद्युत्प्रेक्षितसकलार्थदूषणमत्र द्रष्टव्यमिति आचार्या अभिप्रयन्तीत्र भाति अनुवदिष्यामि इति । ननु वादस्य कथाङ्गत्वात् श्रोतृभ्यस्स्वस्य यथावत् परमतप्रतिपत्तिसूचकत्वादिति भावः । अथ विस्तरेण तन्मदमनुवदति । तत्र प्रथमं तेषां प्रमाणव्यवस्थां दर्शयति அவர்கள் சொல்லும்படி इति । प्रत्यक्षमिति । प्रत्यक्षमेकं चार्वाक इति प्रसिद्धेरित्यर्थः । इन्द्रियाणामतीन्द्रियत्वेनैतन्मतेऽतीन्द्रिय वस्त्वभावात् चार्वाकस्य कथं प्रत्यक्षाभ्युपगमसंभव इति चेत् । शृणु । एतन्मते प्रत्यक्षप्रतिपन्न गोलकाद्यधिष्ठानानामेवेन्द्रियत्वेन तज्जन्यज्ञानसंभवात् । तथाच साङ्ख्यसूत्रम् :– अतीन्द्रियमिन्द्रियम् । भ्रान्तानामधिष्ठानमिति । गोलकमेवेन्द्रियमिति नास्तिकमतमपाकरोति भ्रान्तानामितीति तद्भाष्यम् । ननु तर्हि शुक्तिरजतादिप्रत्यक्षमपि प्रमा स्यात् प्रत्यक्षत्वाविशेषादित्यत्राह அதுதன்னிலும் इति । करणदोषः - इन्द्रियोपघातादिः । आदिना विषयदोषश्चाकचक्यादिर्गृह्यते । तथाच शुक्तिरजतादिप्रत्यक्षस्य दोषमूलत्वेनाप्रमाणत्वेऽपि निर्दोषप्रत्यक्षस्य प्रामाण्यमव्याहतमिति भावः । सर्वसंप्रतिपन्नेत्यनेनास्य चोद्यस्य परिहारः न ममैव भरः । अपितु सर्वेषामिति बोध्यते ॥

ननु स्यादेष मनोरथस्तदा, यद्यनुमानस्य प्रामाण्यं सर्वथा न भवेत् । अस्ति तु तस्य तत् । कथमन्यथा धूमोपलम्भादनन्तरं धूमध्वजेप्रवृत्तिरित्यत्राह अनुमानादिகளிலே इति । अयमाशयः । अनुमानं न प्रमाणम्, व्याप्तेर्दुर्ग्रहत्वात् । तदुक्तं चार्वाकैः । 'विशेषेऽनुगमाभावात् सामान्ये सिद्धसाधनात् । तद्वतोऽनुपपन्नत्वात् अनुमानकथा कुत' इति । अन्यत्र "विशेषेऽनुगमाभावस्सामान्ये सिद्धसाधनं । अनुमाभङ्गपङ्केऽस्मिन्निमग्ना वादिदन्तिन" इति च । तदर्थश्च महानसीय वह्निधूमयोर्वा व्याप्तिः? किंवा तत्सामान्ययोः? । आद्ये विशेषव्याप्तेः पर्वतस्थसाध्यसाधकत्वायोगः । अनुगमस्सम्बन्धः । स च विशेषस्य विशेषान्तरेण नास्तीत्यर्थः । द्वितीये धूमवान् वह्निमानिति सामान्यतः साधनीयं न तु तादृशः पर्वतो वह्निमानिति विशेषतः । तथा च सिद्धसाधनम् ।

---

*கீழே ஸமுதாயதோஷாதிகாரத்தில் சொன்னபடியில் ஸாரமற்று, இளநெஞ்சரை ஏமாற்றக்கூடிய அவைதிக மதங்கள், வைதிகமாயினும் குதர்க்கம் பேசும் மதங்கள். இவைகளில் முதலில் உலகாயதர்களின் ஸித்தாந்தத்தை எடுத்துக்காட்டி கழிக்கிறோம். அவர்கள் சொல்லும் விதம் எது என்றால்:— ப்ரத்யக்ஷம் ஒன்றுதான் ப்ரமாணம். அதிலும் இந்த்ரியங்களின் தோஷத்தினால் உண்டாவது சரியன்று என்பது எல்லோரும் ஒப்பினது. அநுமாநங்களில் சிலவற்றில் தற்செயலாய் ப்ரத்யக்ஷத்தோடு பொருந்தியிருக்கையால் ப்ரமாணம் என்று*

प्रमाणம் என்று ப्रमिக்கிறார்களத்தனை. இவற்றிலே சிலவற்றுக்கு प्रामाण्यंகொள்ளும் पक्षத்தி லும் அவற்றை प्रत्यक्षத்திலே अन्तर्भविப்பிக்கலாம். विषहरणादिमन्त्रयन्त्रचेष्टादिफलसंवादம்

---

ननु यादृशधूमस्य यादृशवह्निविशेषेण सह व्याप्तिर्दृष्टा तादृशवह्निमान् पर्वत इत्येवास्तु अनुमितिः। नह्येतत्पूर्वमेव सिद्धमित्यत्राह – तद्वतोऽनुपपन्नत्वादिति। भावप्रधाननिर्देशः। महानसीयवह्निव्याप्तेरेव तदीयधूमे दृष्टत्वात् तादृशवह्निमत्त्वस्य च पर्वतेऽनुपपन्नत्वात् साप्यनुमितिर्न संभवतीति। द्वितीयकारिकाया अप्येवमेवार्थो बोध्य इति। धूमदर्शनानन्तरं तु वह्निसंशय एवोदेति। तन्निर्णयाय प्रवृत्तः यदृच्छया पर्वते वह्निमासादयति। तेन च धूमज्ञानेऽनुमानाख्यातिरिक्तप्रमाणत्वभ्रमः केषांचित् इति भावः। சிலவற்றை इति। केषांचिद्विषयेषु यादृच्छिकसंवादाद्यभावे अनुमानत्वशङ्कापि नांकुरेदिति हृदयम्। अथ विशेषेऽनुगमाभावादिनाऽनुमानप्रामाण्यनिराकरणेऽस्याप्यनुमानरूपत्वात्स्वसाध्यसाधकत्वमस्ति नवा। अस्ति चेत्कथं व्याप्तिग्रहः। नोचेत्कथं तत्प्रामाण्यप्रतिषेधसिद्धिः। किंच नह्यार्द्रेन्धनप्रभवसन्तमसमलीमसधूमस्तोमदर्शनेपि वन्हेः पर्वते संशयो विपर्ययो वा संभविष्यति। तस्मादनुमानं प्रमाणमेष्टव्यमित्यत्राह – இவற்றிலே इति। சிலவற்றுக்கு इति पूर्ववदर्थः। प्रामाण्यं கொள்ளுமித्यादि। एतदुक्तं भवति- यत्र धूमस्तत्राग्निरिति महानसादौ सामान्यतो दृष्टैव व्याप्तिः धूमवान् पर्वत इति पक्षधर्मताज्ञानबलात्पर्वते वन्ह्यनुमितिं जनयति। कथं तर्हि विशेषव्याप्तिशून्येन पक्षधर्मेणापि हेतुना विशेषसिद्धिरिति चेन्न। विशेषव्याप्तेरनुमानानङ्गत्वात्। विस्तृतं चैतत्सर्वार्थसिद्धौ। न चैवं यत्र वन्हिस्तत्र धूम इति महानसादौ सामान्यतो दृष्टा व्याप्तिः पर्वतो वन्हिमानिति पक्षधर्मताज्ञानबलात्पर्वते धूममनुमापयेदिति वाच्यम्। व्यभिचारविरहसहकृतसहचारस्यैव व्याप्तिपदार्थत्वेन वन्हेरयोगोळकादौ धूमव्यभिचाराच्चदापादनायोगात् इति। अन्तर्भविப்பிக்கலாமித்- तथा च पूर्वोक्तयुक्तिभिरनुमानप्रामाण्यस्यावश्यापेक्षितत्वेपि तस्य पृथक् प्रमाणत्वं किमर्थमित्यभिप्रायः। तथाहि- चक्षुरेवानुमानावान्तरव्यापारवदनुमितिं जनयति। तदुक्तं सर्वार्थसिद्धौ कश्चिदाह धूमादिसंयुक्तमेवेन्द्रियं वन्ह्यादिकं गृह्णातु। किमनेनानुमानेन। सहकारिसामर्थ्ये सर्वं सम्पत्स्यते। चक्षुर्धूमादिसंयोगः प्रथमं सहकारि। तत्सहकारि च व्याप्तिपक्षधर्मताज्ञानादि। किमितरप्रमाणपरिकल्पनेनेति। यद्वा व्याप्तिग्रहार्थमनुमानेन प्रत्यक्षोपजीवनात् तच्छुद्धावेवास्य शुद्धिरिति मूलभूतप्रत्यक्षप्रामाण्य एवैतत्प्रामाण्यं पर्यवस्यति। यथाऽनुभवमूलत्वात् केषांचिन्मते न स्मृतेः पृथक्प्रामाण्यमिति व्याख्येयम्।

नन्वनुमानेऽननुमतेपि, शब्दप्रामाण्यं प्राणित्येव। मन्त्रयन्त्रादीनां फलाविनाभावदर्शनेन तद्बोधकस्य तत्प्रामाण्यस्याप्रतिक्षेप्यत्वादित्याशंक्याह- विषहरणेति। मन्त्रयन्त्रेति। मन्त्रेण प्रयुक्तेन

औषधायस्सूर्यचन्द्रकान्तादिन्यायத்தாலே यथादर्शनं व्यवस्थितமாம். இப்ப்ரத்யக்ஷத்தையும் இதின் विशेषமான अन्वयव्यतिरेकदर्शनத்தையும் கொண்டு प्रवृत्तமான शास्त्रம் लोकायतம். लोकसिद्धानुमानம் पृथक्प्रमाणமாகிலும் अतीन्द्रियமில்லை.

---

विषव्याध्यादिकं शाम्यति। सुदर्शनाद्याकाररेखाभिः तदन्तर्बीजवर्णादिभिश्च विलिख्य पूजितं ताम्रादिपत्रं यन्त्रम्। तदपि पूर्ववत्फलं दिशति। चेष्टा शङ्खचक्राद्याकारहस्तमुद्राप्रदर्शनं, श्रीपांचरात्रादिप्रसिद्धम्। तदपि तथा! औषधेत्यादि। औषधेन रोगनिवृत्तिः। अयस्कान्तेन लोहाकर्षणम्। सूर्यचन्द्रकान्ताभ्यां आतपचन्द्रिकास्पर्शे तेजस्सलिलोद्गिरणं च भवन्ति। यथा दर्शनमिति तथा चैषु यादृशौषधादिसत्त्वे, यद्रोगनिवृत्त्यादिकार्यदर्शनं, तस्य तत् कारणमिति यथा प्रत्यक्षेणैव व्यवस्थाप्यते; भिषजोपि हि प्रत्यक्षेणौषधवीर्यं निर्णीयैव भिषज्यन्ति, तथैव मन्त्रादिष्वपि यथादर्शनं तत्तत्कार्यकरत्वव्यवस्था। मन्त्रादिरपि दृष्टस्तत्कार्यं चेति क्व शास्त्रं। क्व वाऽनुमानमिति भावः। तदुक्तः- अग्निरुष्णो जलं शीतं समस्पर्शस्तथानिलः। केनेदं चित्रितं तस्मात्स्वभावात्तद्व्यवस्थितिः॥ शिखिनश्चित्रयेत्को वा कोकिलान्कः प्रकूजयेत्। स्वभावव्यतिरेकेण विद्यते नास्य कारणम्॥ इति। एवं प्रत्यक्षमात्रस्य प्रामाण्यं प्रतिष्ठाप्य तन्मूलकतया प्रवृत्तत्वादिदमेव मतमुत्तममित्याह - இப்ப்ரத்யக்ஷத்தையுமிति। ननु तर्हि जगति किं मेधया साधनीयमस्ति। दृष्टे तर्काद्यनपेक्षणात्। अदृष्टस्य चानङ्गीकारात्। तथाचोहापोहादिविज्ञानाय दत्तो जलांजलिस्स्यादित्यनुशयान आह- இதின் विशेषம[illegible] इति। तथाचान्वयव्यतिरेकदर्शनस्य प्रत्यक्षविशेषत्वात् दृष्टसजातीयेष्वदृष्टेषूहापोहौ तन्मूलकत्वादभ्यनुजानीम इत्यर्थः। न तावताप्यत्यन्तातीन्द्रियसिद्धिरिति भावः। प्रवृत्तமான-प्रवृत्तत्वादिति भावः। शास्त्र-इदमेव शास्त्रम्। लोकायतम्-अन्वर्थं नाम। उत्तममिति भावः। नन्वनुमानं पृथगेव प्रमाणम्, इन्द्रियव्यापारोपरतावपि व्याप्यस्मरणेन व्यापकप्रतीतेरिष्टत्वाद् दृष्टत्वाच्च प्रत्यक्षत्वायोगात्। पर्वते धूमो दृष्ट इतिवत् तत्र वन्हिर्दृष्ट इति व्यवहाराभावात्। न च संस्कारप्रत्यासत्त्या मानस-

---

ப்ரமம் கிலற்கு ஏற்படுகிறது. நாம் அநுமாநம் என்று நினைத்திருக்கும் சில ஜ்ஞாநங்கள் உண்மையில் ப்ரமாணங்களாகவே இருப்பினும் அவையும் கடைசியில் ப்ரத்யக்ஷத்தைச் சார்ந்தவையே என்று வாதிக்கவும் இடம் இருக்கிறது. விஷக்கடி மந்த்ரம், நாரஸிம்மாதியந்த்ரம் முதலியன பலிக்கக் காண்கையாலே கண்ணுக்கப்பாற்பட்டதும் உண்டு என்னப்போகாது. பசிலைகள், காந்த ஊசி, ஸூரியகாந்தக்கல் முதலியன தம்தமக்குள்ள இயற்கை சக்தியின்படி செயல்புரிவதுபோல் மந்த்ரங்களில் எழுத்துக்களின் சேர்க்கை, குறிப்பிட்ட லோகத்தகட்டில் கோடுவரைதல் முதலியவற்றின் சக்தி வேலைசெய்வதால் அங்கும் ஒன்றும் காணாததும் இல்லை. இவ்விதம் ப்ரத்யக்ஷாநுபவத்தை ஒட்டி கட்டிய மதம் உலோகாயதம். அநுமாநமும் ஒரு ப்ரமாணம் என்றே வைத்துக்கொண்டாலும், ப்ரத்யக்ஷஸித்தவிஷயத்தில் அது ப்ரமாணமாமே யொழிய உலகத்திற்கப்பாற்பட்டவஸ்து விஷயத்தில் ப்ரமாணமாகாது. இம்மதத்தை ஆதியில் ப்ருஹஸ்பதி உலகுக்கு வெளியிட்டார்.

**லோகாயதமதத்தில் ப்ரமேய வ்யவஸ்தை**

இப்ப்ரமாணம்கொண்டு அறியவேண்டும் அர்த்தத்தை 'अथ लोकायतम्। पृथिव्यापस्तेजो वायुरिति तत्त्वानि। तेभ्यश्चैतन्यं किण्वादिभ्यो मदशक्तिवत्।' என்று தொடங்கி ஸூத்ரங்களாலே बृहस्पति சொன்னான். இவற்றை चार्वाकादिमुखத்தாலே भाष्यादिपूर्वकமாக प्रवर्तिப்பிப்பதும் செய்தான். आकाशமும் तत्त्वமாக संग्रहिக்கவுமாம்.

---

प्रत्यक्षं तदिति वाच्यम्। बाह्यप्रत्यक्षेऽपि तत्प्रत्यासत्त्या तथात्वप्रसङ्गात् इत्याक्षेपे तेष्वेव केषांचित् समाधानं दर्शयति- लोकसिद्धेति। प्रत्यक्षयोग्यार्थविषयकेत्यर्थः। पृथक्- प्रत्यक्षान्तर्भावं विना। अयं चार्थस्सर्वार्थसिद्धावनुगृहीतः- 'ये तु लोकायतमित्यत्रायतशब्दविवक्षितमनुमानमपि प्रत्यक्षान्तर्भावेण, तत्फलतया वा गृह्णन्तीत्यादि। अतीन्द्रियं- जीवेश्वरादिकं। இல்லை- तत्र व्याप्तेस्सर्वथा दुर्ग्रहतयानुमानेन न तत्सिद्धिरित्यर्थः।

इत्थं स्वाभिमतयोः प्रमाणप्रमेययोर्मध्ये प्रमाणं निरूप्याथ प्रमेयं निरूपयितुं तयोर्ग्राह्यग्राहकभावलक्षणां सङ्गतिमाह- இப்ப்ரமாணம்கொண்டு इति। प्रेक्षावतां प्रवृत्तये आचार्यनाम संकीर्तयन् तत्प्रणीतसूत्राणि सूचयति- अथ लोकायतमिति। अथेत्यारम्भार्थे। पृथिव्यादीनि चत्वार्येव प्रमेयानि। नातोन्यत्। तर्हि चैतन्यं कस्य भवेद्धर्मः। पृथिव्यादीनां तदसंभवात् इत्यत्राह— तेभ्यश्चैतन्यमिति। पृथिव्यादिभ्यस्संघातात्मको देह उत्पद्यते। प्रत्येकं चैतन्यरहितेभ्योपि तेभ्यस्तत्र तदुत्पद्यते। प्रत्येकं तद्रहितानामपि संहतौ तदुत्पादनं निदर्शयति। किण्वादिभ्य इति। किण्वं सुराप्रकृतिद्रव्यम्। आदिना क्रमुकताम्बूलग्रहणम्। परस्परसंघर्षसंश्लेषादिना प्रागविद्यमानयोर्मदसुरारागयोरिदानीमुत्पत्तिदर्शनादिति भावः। बृहस्पतीति- प्राज्ञानां प्रथमो हि सुरगुरुरिमानि सूत्राणि प्रणिनायेति भावः। एतेषां सूत्राणां भाष्यकृतं दर्शयति- இவற்றை इति। आपातरमणीयतया चारुर्वाको- वाक्यं यस्येति चार्वाकः। वर्णनाशः पृषोदरादित्वात्साधु। ननु 'नीलं नभः' 'अत्र श्येनः पतती'त्यादिना नभसश्चाक्षुषत्वात् न तत्त्याग उचित इत्यत्रैकदेशिनां तत्सम्मतिं दर्शयति- आकाशமுமிதி। ஈட்டின் ப்ரமாணத்திரட்டு ग्रन्थे सौम्यवराधिपदेशिकेन तत्त्वत्रयविवरणे चार्वाकपक्ष उदाहृतः। यादवप्रकाशेन तत्त्वविचारणायान्तु 'पृथिव्यापस्तेजो वायुराकाश इति तत्त्वानीति' सूत्रे पाठभेदश्च प्रादर्शि। सङ्ग्रहिக்கவுமாமிதி अस्मिन्पक्षे अनादरोक्त्या आकाशस्य निराकरणमेव तेष्वेव बहुवादिसम्मतमिति द्योत्यते। आत्मसिद्धिसर्वार्थसिद्ध्यादिष्वनुदाहरणाच्च।

---

ப்ருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு என்று நான்கு தத்வங்கள் இம்மதத்தில் வழங்கும். தென்னை முதலியவைகளுடைய பாளைகளின் சேர்க்கையினால் பதனீர் இறக்குவதுபோல் இத்தத்வங்களின் கூட்டுறவில் சரீரத்திற்கு அறிவு பிறக்கிறது. தனித்தொரு ஜீவன் கிடையாது.

லோகாயத மதச்சிறப்பு.

सर्वसंप्रतिपन्नங்களாய் प्रत्यक्षोपायसாध்யங்களுமான अर्थकामங்களாகிற पुरुषार्थங்களுக்கும், அவற்றை प्रयोजनமாகப்பற்றின नीतिस्तेयकामशास्त्रங்களுக்கும், பொருந்தி இருக்கையாலும், लोकसिद्धங்களில் ஒருவர்க்கும் பிணங்கவேண்டாமையாலும், लोकोत्तीर्णங்களைக் கொள்ளாமை

---

अथ पूर्वमेव बृहस्पतिसम्बन्धलोकायतशब्दस्वारस्याभ्यां स्वमतस्य व्यञ्जितं वैशिष्ट्यं विविधहेतुभिर्विस्तृणाति सर्वसम्प्रतिपन्नेत्यादि महावाक्येन। सर्वसम्प्रतिपन्नत्वं धर्ममोक्षकांक्षिभिरप्यनुमतत्वम्। ननु शास्त्रीयोपायभूतेन प्रतिग्रहादिनार्थलाभं यागादिना स्वर्गीयरंभासंभोगसुखं च किमङ्गीकुरुषे। नेत्याह - प्रत्यक्षोपायेति। तेचोपाया वक्ष्यमाणनीतिकामादिशास्त्रसिद्धा एव। धर्ममोक्षयोस्तु दुःखसाध्यत्वादिनाऽपुरुषार्थत्वमेव तन्मते। ननु कामार्थयोरपि तथात्वात्कथं पुमर्थत्वमिति चेन्न। नान्तरीयकतया प्राप्तस्य दुःखस्य कथंचित्परिहारेण तदसंभवे मर्षणेन वा सुखमात्रस्यैव भोक्तव्यत्वात्। नहि दुःखामिश्रितं सुखं नाम क्वचित् किंचिद्दृष्टम्। न वा दुःखस्य द्वेष्यत्वात्तदनुबद्धं सुखमपि त्यक्तव्यम्। नहि मृगास्सन्तीति शालयो नोप्यन्ते। नहि भिक्षुकास्सन्तीति स्थाल्यो नाधिश्रीयन्ते। तदुक्तं प्रबोधचन्द्रोदये। "त्याज्यं सुखं विषयसंगमजन्म पुंसां दुःखोपसृष्टमिति मूर्खविचारणैषा। व्रीहीन् जिहासति सितोत्तमतण्डुलाढ्यान् कोनामभोस्तुषकणोपहितान्हितार्थी"ति। न च तर्ह्येवमेव धर्ममोक्षयोरपि नान्तरीयकदुःखपरिहारादिना ग्राह्यत्वमस्त्विति वाच्यम्। तयोः स्वरूपत एवासिद्ध्यार्थकामतुल्यताविरहात्। हेत्वन्तरमाह அவற்றை इति। नीतिशास्त्रस्य शुक्रकौटिल्यकामन्दकादयः कर्तारः। स्तेयशास्त्रस्य तु कर्णीसुतादिः। 'न तदपलपति स्वर्गकर्णीसुतोपीति श्लोकसर्वार्थसिद्धावेवमुक्तः। 'वर्णसंकराश्चित्रपटे, स्तेयप्रस्तावः कर्णीसुतकथास्विति नगरवर्णने कविप्रयोगाच्च। स्कन्द इत्येके वदन्ति। अत एव चोराणां स्कन्दपुत्रत्वव्यवहारः। द्रष्टव्यं चैतन्मृच्छकटिकादौ। कामशास्त्रं वात्स्यायनीयं। नीतिशास्त्रस्यापि प्रायः परवंचनोपायोपदेशपरत्वात्। 'परातिसन्धानमधीयते यैर्विद्योतते सन्तु किलाप्तवाचः' इत्याद्यनुरोधेनार्थप्रामाण्यमादाय स्तेयशास्त्रसमकोटितया निर्देशः। प्रत्यक्षसिद्धत्वात्स्वमतप्रमेयस्यासन्दिग्धत्वं अतीन्द्रियानङ्गीकरणेनाबाधितत्वं च प्राशस्त्यहेतुमाह - लोकसिद्धங்களிலிதி। பிணக்கம்- सन्देहः। स्वमतोपदे-

---

சார்வாகன் என்பான் ப்ருஹஸ்பதிஸூத்ரங்களுக்கு பாஷ்யமிட்டான். இவர்களிற்சிலர் ஆகாசத்தையும் தத்வமாகக்கொள்வர்.

ப்ரத்யக்ஷமாய் எல்லோருமொப்பிய பொருளையும் இன்பத்தையும் நோக்காகக்கொண்டு நீதி நூல்கள், காமசாஸ்த்ரம், "திருடுவது எப்படி" என்பதை விளக்கும, ஸுப்ரம்மண்யன், கர்ணீஸுதன் முதலியவர் எழுதிய சோரசாஸ்த்ரம, இவைகளுக்கு இசைவாயிருப்பது இம்மதம் ஒன்றே. அநுபவத்தில் கண்டதை யாரும ஸந்தேஹிக்கமாட்டார்கள். காணாததை

யாலே அவையடியாக बाधம் சொல்லவொண்ணாமையாலும், "यावज्जीवं सुखं जीवेत्" என்றுப போலே சொல்லும் गुरूपदेशம் पशुमृगादिकளோடொக்க सर्वसामयिकமாகளுடையவும் हृदयத்தைத் தொட்டுப்பார்த்தால் ஒத்திருக்கையாலும், प्रबलतमமான இச்சாஸ்த்ரமே परमहितம். कार्य(व्य)ங்களைப்போலே கண்டறியாத जातिविशेषकर्तव्यविशेषादिகளைக்கட்டி கையிலுள்ள धनத்தை

---

शस्य पण्डितपामरसर्वहृदयङ्गमत्वं च हेतूकरोति- यावज्जीवमिति। 'यावज्जीवं सुखं जीवेत् नास्ति मृत्योरगोचरः। भस्मीभूतस्य देहस्य पुनरागमनं कुतः॥ इति पूर्णश्लोकः। अत्र 'ऋणं कृत्वा घृतं पिबेति द्वितीयपादस्य पाठभेदश्च दृश्यते। पशुमृगादीति। सुखजीवनेच्छाया जन्तुमात्रसाधारण्यादिति भावः। ननु "ब्राह्मणस्य च देहोयं नोपभोगाय कल्पत" इत्यादिना वैदिकतन्त्रनिष्ठैः बहुतरकायक्लेशेषु प्रवृत्त्या न सुखजीवनेच्छा तेषु दृश्यत इतिचेदुक्तं "हृदयத்தைத் தொட்டுப பார்த்தாலிதி। तथा च तेषां संकेतभीत्याऽहृदयं तथानुष्ठानेऽपि, वस्तुतो हृदयाक्रोशश्श्रूयत एव तेषामन्तरङ्गैरित्यभिमानः। हितं-हितबोधकत्वाद्धितम्। "இச்சாஸ்த்ரமே" इत्यत्र व्यञ्जितं परमतानामनुपादेयत्वं हेतुतो विवृणोति - கார்யங்கள்போலவிதி। अस्य "கட்டி" इत्यत्र कल्पनेऽन्वयः। कवयो हि विविधमुत्प्रेक्षादिना कल्पयन्ति। यद्वा "கார்யங்கள்போல इत्येव पाठः। तदायं व्यतिरेकदृष्टान्तः। यथा गोमहिषादिकार्यभेदजातिभेदादिकं दृश्यते, तथा ब्राह्मणक्षत्रियादिजातिभेदो न दृश्यत इत्यर्थः। वक्ष्यति चोपरि सिद्धान्ते "ब्राह्मणत्वक्षत्रियत्वादिजातिविशेषம் गोमहिषादि जातिகள்போலே காணவொண்ணாதிருக்க" इति। तत्तज्जात्यनुगुणकर्तव्यक्रियाकलापश्च "ब्राह्मण क्षत्रियविशां शूद्राणां च परन्तप। कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैरित्याद्युक्तः। क्षुत्पिपासादिवदेतेषां प्रत्यक्षतोऽवर्जनीयत्वाभावात् तदर्थप्रवृत्तिर्व्यर्थैवेत्यर्थः। न केवलं व्यर्थतैव, अपित्वनर्थोपि भवतीत्याह - கையிலுள்ளவிதி अर्थस्य हि श्रैष्ठ्यं श्रीमद्रामायणे "यस्यार्थास्तस्य मित्राणि यस्यार्थास्तस्य बान्धवाः। यस्यार्थास्सपुमान् लोके, यस्यार्थास्स च पण्डित इत्या

---

ஒத்துக்கொண்டு இம்மதம் திண்டாடுவதுமில்லை. இம்மதாசார்யர்கள் "உடலைக்காத்துப் போஷியுங்கள். நன்கு வாழ்வகைதேடுங்கள்" என்றுபோல் உபதேசிக்கும் தோரணை எவரையும் கவர்ந்திழுக்கும் தன்மைவாய்ந்தது என்பதை அவரவர் நெஞ்சைத் தொட்டுப்பார்த்து அறியலாம்.

மற்ற மதங்கள், அசட்டுப்பிசட்டென்று, கவிகள் கற்பனை உலகில் ஸஞ்சரிப்பதுபோல் ஏதோ சில ஜாதிகள் என்றும், ஆத்தமில்லாத வைதிகச்சடங்குகள் என்றும், சிலவற்றைக் கற்பித்து, கையிலுள்ள காசைக் கரியாக்கி, உடலையும் வருத்தி "இரந்துண்ணல், தலைமொட்டை, அல்லது சடைக்கட்டு" இத்யாதி வேதனைகளை இன்பம்போலக் காட்டி மயக்குவதால், அவை இம்மதத்திற்கு உறைபோடவும் காணாது. பிழைக்கத்தெரியாதவர்கள் தாம் வயிறு வளப்பதற்காக, பாமரஜனங்களை ஏமாற்றி வைதிகமதம் என்ற ஒன்றை உலகில் பரப்பி இருப்பதால், சில ஸமயங்களில் நாமும் அரசன் ஆஜ்ஞைக்குக் கீழ்படிவதுபோல அந்தமத ஸம்ப்ரதாயங்களுக்கு

அழிக்கையும் **कायक्लेश**ப்படுகையும், இரந்துண்கையும், தலைபறியும் சடைக்கட்டும்போலே சொல்லுகிற **दु:खसाधन**ங்களை **सुखसाधन**ங்களென்கிற **मिथ्यार्थमूलमतान्तर**ங்கள் **बुद्धिमान्**க ளுக்கு **उपादेय**ங்களன்று **बुद्धिपौरुषहीन**ர்களுக்கு **जीविके**யாய் **गतानुगतिकलोकवंचनार्थ**மாகை யாலே **राजादिसंकेतसिद्धसमय**ங்களைப்போலே அன்றுடு உற்றதுபற்றி நிற்க **प्राप्तम्**.

---

दिना विस्तरेणोक्तम् । அழிக்கையுமிதி । तदपि तत्रैव "अष्टकाः पितृदैवत्यमित्ययं प्रसृतो जनः । अन्नस्योपद्रवं पश्य मृतो हि किमशिष्यतीत्याद्युक्तम् । "கைத்தலத்துள்ளமாடழியக் கண்ணாலங் கள் செய்து" इति कल्पसूत्रव्याख्यात्रा श्रीविष्णुमिश्रेण च । न केवलमेतदेवेत्याह- कायक्लेशेति । "एकादशीस्कन्दषष्ठी चातुर्मास्यव्रतं तथेत्याद्युक्तानि । निरुद्देषमर्थस्वन्यधिनत्वादशनाच्छादनार्थं इரந் துண்கை । भिक्षणं, भक्षणं च । தலைபறியும் - मौण्ड्यं केशोल्लुञ्चनं वा । शैवानां पूर्व, जैनाना मुत्तरम् । क्षौरं परित्यज्य शिरसिजानुल्लुञ्चन्ति हि जैनाः । तदुक्तं- येषां निगमपदवीदूषणो दीर्णरोषैर्दत्तो नूनं स्थिरशिरसिजोल्लुञ्छनेनैवदण्ड"इति वैदिकैरुपहासेन । சடைக்கட்டு- जटाधारणम् "रुद्राक्षकङ्कणं हस्ते जटा चैका च मस्तके" "पुंसां जटाभरणमौण्ड्यवतां वृथैवेत्यादि च भाव्यम् । போலே சொல்லுகிற इत्यनेन तप्तशिलारोहभस्मशयनादिक ग्राह्यम् । तर्हि कथं तत्र प्रवृत्तिरित्य-त्राह- दुःखसाधनेति । बहवो हि मतान्तराण्यप्युपाददते, कथं तदित्यत्राह "बुद्धिमान्களுக்கு इति । तथाच मन्दमतयस्तदुपाददीरन्निति भावः । नन्वेवं स्पष्टविशिष्टासन्मते आग्रति कथं तानि जातानि । तत्तन्मतप्रचुरभूमिषु निवसद्भिर्वास्माभिः कथं वर्तितव्यमित्यत्राह- बुद्धिपौरुषेति । "अग्निहोत्रं त्रयो वेदाः त्रिदण्डं भस्मकुण्ठनम् । बुद्धिपौरुषहीनानां जीविकेति बृहस्पतिरिति वचनमिह भाव्यम् । एकस्य जीवनमिति कथमन्ये तत्प्रपद्यन्त इति चेदाह- गतानुगतिकेति । तदुक्तं "गतानुगतिको लोको न लोकः पारमार्थिकः । सेतौ सैकतलिङ्गेन नष्टं मे ताम्रभाजनमिति । वंचनेति । तथा च रामायणे जाबालिः । दानसंवननाह्येते ग्रन्था मेधाविभिःकृताः । यजस्व देहि दीक्षस्व तपस्तप्यस्व संत्यजेति । वंचनार्थमितरेषां मतमिति शेषः । राजादिसंकेतेति । यथा प्रजाः, बलवत्तरराजशासना धीनाः तदा तदा अवर्जनीयं अन्यान्यं निर्बन्धं देशकालादिभेदेन तद्वशानुभवन्ति, तदेवानुकूलं, परम्परया कुलधर्म इत्यागृह्णन्ति च तथास्माभिरपि तत्तद्देशकालानुगुणमवर्जनीयतयाऽऽपतितमहन्य हन्यनुष्ठेयमिति तात्पर्यम् । तदुक्तं चार्वाकमतसंग्रहे - भूमिपालादिसंकेतसंसिद्धान्समयानिव । तत्त द्देशीयमाचारं युक्तमेवानुवर्तितुम् इति । அன்றுடு - प्रत्यहं । உற்றதுபற்றி आपतितमादाय । நிற்க प्राप्तम् - स्थातुं युक्तम् ॥

---

உட்படவேண்டிவருவதை, நிலைமைகளுக்கு ஏற்ப அன்றன்று நடந்து ஸமாளிக்கவேண்டும் என்று அம்மதஸ்தர் கூறுவர்.

இம் மதத்தில் சரீரமே ஆத்மாவென்கிறது.

शरीरप्राणवैश्वानरेन्द्रियावयवविशेषधातुविशेषादिகளை ஒழிய வேறொரு आत्माவும் உண்டாய் அவன் शरीरान्तरपरिग्रहம் பண்ணும் என்னும் अर्थம் மெய்யாகிலன்றோ नरकादिகளுக்கு அஞ்சி परहिंसादिகள் தவிர வேண்டுவதும், तरुणीताम्बूलशयनासनादिप्रत्यक्षस्वर्गங்களை விட்டு परोक्षस्वर्गங்களைப்பற்ற பட்டினியும் உபபிலியும் முதலாகப் படாதனபடவேண்டுவதும். शरीरம் आत्माவென்னுமிடம் 'स्थूलोहं' 'कृशोहं'मित्यादि सर्वसंप्रतिपन्नप्रत्यक्षप्रत्ययसिद्धம். இத்தை बाधिக்கப் பார்த்தால் 'अग्निरुष्णः' इत्यादि प्रत्यक्षத்தையும் बाधिக்கலாம்படியாம். 'मम शरीर'மென்றது शिला

---

ननु भोस्सोयं यथेच्छसंचरणकुतूहलिनां प्रलापस्सर्वथा नशोभते । तथासति कदाचिदर्थ कामार्थं परहिंसाद्यपि कर्तव्यं प्रसजेत् । ततश्च निरये नियतः पातः । किंच क्षुद्रसुखलोभेन निषिद्धानुष्ठाने पापप्रसक्त्या नित्यसुखात्मकपरलोकहानिर्भवेत् । न सा बुद्धिमत्ता । "अल्पस्य हेतोर्बहु हातुमिच्छन्निति निन्दनादित्याशङ्कायामाह - शरीरप्राणेति । वैश्वानरः- जाठराग्निः । इन्द्रियविशेषश्चक्षुरादिः । अवयवविशेषः- हृत्प्रदेशः । धातुविशेषः- ज्ञानसाधनत्वेनायुर्वेदादिसिद्धः पित्तधातुः । एतेष्वन्यतमआत्मा नातिरिक्तइत्यर्थः । यद्यपि चार्वाकानां देहात्मवादित्वमेव प्रसिद्धम् । "तेभ्यश्चैतन्य"मित्यादितद्ग्रन्थान्यानुवादादिसिद्धं च । तथापि, देहस्य मृतस्य मरणानन्तरमपि तदवस्थस्यैव किञ्चित्कालमनुवृत्त्या तदानीमात्मसद्भावस्य विद्विष्टत्वात् तदानीमेवोद्गतप्राणादीनामात्मत्वमुचितमिति तेष्वेव केचिन्नवीना एवमङ्गीचक्रुरिति बोध्यम् । अतीन्द्रियविशेषस्यात्मत्ववादे पूर्वोक्तरीत्याऽधिष्ठानस्यैवेन्द्रियत्वं स्मर्तव्यम् । अन्यथा तस्याहंकारिकस्याप्रलयस्थायित्वेन देहसमकालमुत्पत्तिविनाशायोगात् । மெய்யாகிலன்றோ इति । वेदएव "नप्रेत्यसंज्ञास्ति"; एतेभ्यो भूतेभ्यस्समुत्थाय तान्येवानुविनश्यतीत्यादिदर्शनादिति भावः । तरुणीताम्बूलेत्यादि । तथा च सर्वसिद्धान्तसंग्रहे शङ्कराचार्यः- "इहलोकात्परो नान्यस्स्वर्गोऽस्ति नरकोपि वा । शिवलोकादयो मूढैः कल्प्यन्तेऽन्यैः प्रतारकैः । स्वर्गानुभूतिर्मृष्टाष्टिः वर्षवधूगमः । सूक्ष्मवस्त्रसुगन्धस्रक्चन्दनादिनिषेवणम् । नरकानुभवो वैरिशस्त्रव्याध्याद्युपद्रवः । मोक्षस्तु मरणं प्राणसंज्ञवायुनिवर्तनम् । अतस्तदर्थं नायासं कर्तुमर्हति पण्डित इति । பட்டினி - अनशनं । உப்பிலி - लवणवर्जनम् । व्रतविशेषेषु शाकविशेषलवणादिवर्जनं विहितम् । படாதனபடுதல் - अननुभाव्यानुभवः । उक्तेषु पक्षेषु शरीरस्य आत्मत्वपक्षं प्रतिष्ठापयति । नन देहात्मभेदवादिभिरिदङ्काराहंकाराभ्यां घटात्मनोरिव देहात्मनोरपि भेदस्य साध्यमानत्वात्, तत्खण्डनाय देहस्यापि अहंप्रत्ययगोचरत्वं दर्शयति । शरीरमिति । स्थूलत्वादीनां देहधर्मत्वादिति भावः । ननु मम शरीरमिति व्यतिरेकप्रतीत्या स्थूलोहमिति स्थूलशरीरकोहमित्यर्थः ननु स्थूलत्वादिधर्मवानहमिति, बाधादित्यत्राह । இத்தை बाधिக்கவிதி । अग्निरुष्ण इत्यत्रापि नोष्णत्ववानग्निरित्यर्थः, अपितूष्णाधिष्ठानक इति बाधप्रसङ्गइत्यर्थः । मम शरीरमिति व्यतिरेक

पुत्रकशरीरादिव्यपदेशन्यायத்தாலே 'ममात्मा' என்றதோடொக்கும். अचेतनपरिणामத்துக்கு चैतन्यம் கூடுமோ என்னில் पृथिव्यादिகள் நாலுமொழிய வேறொரு तत्वமில்லாமையாலும், இவற்றினு

निर्देशं निर्वहति - मम शरीरमिति । शिलापुत्रकेति । दृषत्पुत्रकस्य निरात्मकत्वेन शिलापुत्रकस्य शरीरमिति षष्ठ्यास्संबन्धार्थकत्वे संबन्धस्य द्विनिष्ठत्वेन तत्र व्यक्तिद्वयासंभवाद्यद्यप्यनुपपत्तिर्भवति । तथापि मुख्यतयाऽन्यस्य तत्सम्बन्धित्ववत् गौणतयात्र तस्यैव तत्सम्बन्धित्वं परिकल्प्य शिलापुत्रकस्य शरीरमिति व्यवह्रियत इति यथा निर्वाहः, तथा मम शरीरमित्यत्रापि व्यक्तिद्वयाभावेपि तस्यैव तत्सम्बन्धित्वपरिकल्पनेन निर्वाह इति भावः । अयं च न्यायः पाणिनीये "व्यपदेशिवदेकस्मि"न्निति व्युत्पादितः । तत्र हि एकाक्षरस्याशब्दस्य कथमकारान्तत्वमिति परिचोद्योच्यते व्यपदेशिवदेकस्मिन्निति । एकस्मिन्- असहायएकाक्षरात्मकेऽकारे, व्यपदेशिवत्- मुख्यतया रामशब्दादावकारान्तत्वव्यवहारवत् कथंचित्काल्पनिकं भेदमादाय तस्यात्र तदन्तत्वं व्यपदिश्यत इत्यर्थ इति । केचित्तु षष्ठ्यास्संबन्धसामान्यार्थकत्वेनाभेदस्यापि तदर्थत्वात् सम्बन्धद्विनिष्ठत्वनियमस्यचाभेदातिरिक्तविषयकतया "मम शरीरमिति मदभिन्नं शरीरमित्यर्थ इति वदन्ति । आदिना "राहोश्शिरइति व्यपदेशग्रहणम् । ननु मम शरीरमित्यत्र मुख्यतया निर्वाहे सम्भवति गौणत्वाश्रयणं जघन्यमित्यत्र सिद्धान्तिनापि गौणतयैव निर्वाह्यं व्यवहारान्तरं दृष्टान्तयति - ममात्मेति । अन्यथा तत्रापि अस्मच्छब्दार्थव्यतिरिक्तआत्मा व्यतिरेकनिर्देशबलात्प्राप्नुयादिति भावः ।

ननु शरीरस्यैवात्मत्वे चैतन्याश्रयत्वमपि तस्य वक्तव्यम् । तन्नयुज्यते । कार्यगतगुणस्य कारणगुणपूर्वकत्वनियमेन कारणभूतपृथिव्यादिष्वपि तत्प्राप्तिप्रसंगात् तस्य च प्रत्यक्षविरोधादित्यत्र नाना, निदर्शयति- अचेतनेति । अत्र शरीरमचेतनमचेतनपरिणामत्वात् यद्यादृशस्य परिणामः तदपि तादृगेव, मृन्मयघटादिवदिचानुमानमभिमतम् । अस्मिन्ननुमाने विविधस्थलेषु व्यभिचारं प्रदर्शयिष्यन् पूर्वं निबन्धतो देहस्यैव स्वमते चैतन्यस्वीकारे कारणं दर्शयति - पृथिव्यादिகள் इति । இல்லாமை

நரகத்திற்கு நடுங்கி நாம் எதையும் செய்யாமல் இருக்கவேண்டாம். எரிந்து சாம்பலாகும் இந்த சரீரத்துக்கு அப்பாற்பட்ட ஆத்மா என்றொரு வஸ்து இருந்து அது லோகாந்தரம் செல்லும் என்பதே கிடையாதே. சாப்பாடு, சயநம், வெற்றிலே, வனிதை முதலிய ப்ரத்யக்ஷ ஸ்வர்கத்தைவிட்டு, காணாத ஓர் கனவுலகத்திற்கென்று பட்டிணி, உப்பில்லாத உணவு போன்ற நியமங்களை ஏன் அநுஷ்டிக்கவேணும்? "நான் கருத்தவன் இளைத்தவன்" என்றவாறு உலகில் பேச்சு காணப்படுவதால் நான் என்கிற ஆத்மவஸ்து கருத்த இளைத்த சரீரமேயல்லது வேறல்ல என்பது கல்வெட்டாய் தேறுகிறது. நெருப்புச்சுடும் என்ற பேச்சுபோல் இதுவும் ஓர் உண்மையான வார்த்தையே. "பொம்மையில் உடல்" என்று ஒன்றான பொருளை வேறுபடுத்திக் கூறுவதுபோல் நாமே உடலாயிருந்தும் "நமது உடல்" என்று வேறுபாடு தோன்ற ப்ரயோகிக்கவும் கூடும்.

டைய यादृच्छिकसंसर्गविशेषदशैயிலே किण्वादिद्रव्यविशेषसंसर्गावस्थैயில் मदशक्तिபோலவும், மற்றும், विचित्रद्रव्यसंयोगविशेषத்திலே विषरसायनादिशक्तिகள்போலவும், चूर्णहरिद्रादि राग, करका-

---

யாலுமிதீ अन्यथानुपपत्तिर्हि सर्वतो बलवतीति भावः । संसर्गविशेषः- शरीराकारेण परिणामः । तेनान्यदा पृथिव्यादिसंसर्गेऽस्मदादिकृते चैतन्यचोद्यस्य नावकाशः । यादृच्छिकेति तस्याहेतुकत्वमुक्तम् । कार्यकारणभावभङ्गस्य वक्ष्यमाणत्वात् । किण्वादीति । संसर्गावस्था तत्परिणामभूतसुरादिमदकर द्रव्यावस्था । अयं च दृष्टान्तः पूर्वमेव बार्हस्पत्यसूत्रनिर्दिष्टः । नोदाहरणविशेषआदर्तव्य इति मत्वा सूत्रानुक्तान्यपि दृष्टान्तयति - மற்றும் विचित्रेति । सुराहि किण्वादीनां स्थूलांशवियोजनेन सूक्ष्मांशसंयोजनमात्रेण परिणतो द्रव्यविशेषः । ततस्तत्र तत्प्रत्यभिज्ञापि नास्तीति सुरायां द्रव्यान्तरत्वभ्रमो भवति केषांचित् । अतो न सा प्रकृतानुगुणं निदर्शनमिति दृष्टान्तान्तरानुसरणम् । विषेति । "मधुसर्पिर्वसातैलपानीयानि द्विशस्त्रिशः । एकत्र वा समांशानि विषायन्ते परस्परम् ॥" इति वाग्भटः । "दशरात्रोषितं कांस्ये क्षीरं चापि विषायते" इति च कुसुमांजलौ । रसायनेति । अत्र रस शब्देन, रसासृङ्मांसमेदोऽस्थिमज्जाशुक्लानां सप्तधातूनां ग्रहणम् । तेषां वर्धकं रसायनं "लाभोपायो हि शस्तानां रसादीनां रसायनम्" इति तल्लक्षणात् । तदुत्पत्तिप्रकारस्तु चरके- "मधुकेन, तुगाक्षीर्या, पिप्पल्या क्षौद्रसर्पिषा । त्रिफला सितया चापि युक्ता सिद्धं रसायनम् ॥" इति । मधुकादिना युक्ता त्रिफला रसायनं सिद्धमित्यन्वयः । मधुकं- அதிமதுரம் । तुगाक्षीरी- மூங்கிலுப்பு । पिप्पली திப்பிலி । क्षौद्रं- தேன் । सर्पिः- நெய் । त्रिफला- கடுக்காய், நெல்லிக்காய், தானிக்காய் । सिता- வெள்ளைச்சக்கரை । तथा चैषां द्रव्याणां वैद्यकोक्तपरिमाणादिक्रमेण संयोग एव विषरसायनाद्युत्पत्त्या तत्र प्रकृतिद्रव्यप्रत्यभिज्ञाया अक्षतत्वेन प्रत्येकमविद्यमानस्यापि गुणस्य समुदायोत्पत्तावस्यैव दृष्टान्तत्वोपपत्तिरिति भावः । अत एव पूर्वोत्तरयोर्दृष्टान्तयोः "द्रव्यविशेषसंसर्गावस्थैயில்" "विचित्रद्रव्यसंयोगविशेषத்தில்" इति परस्परसंबन्धभेदबोधनाय निर्देशभेद आदृत आचार्यैरिति विभाव्यम् । पूर्वमविद्यमानगुणोत्पत्तेरुक्तस्थलद्वयेऽप्यनुमेयत्वेन, प्रत्यक्षतस्तदुत्पत्तिं निदर्शयति- चूर्णहरिद्रेति । तत्र सुधाचूर्णहरिद्रादिगतशुक्लपीतरूपविपर्यासेन रक्तगुणोत्पत्तिः प्रत्यक्षसिद्धेति भावः ।

---

ஜடப்பொருளாகிய சரீரத்திற்கு ஜ்ஞாநம் கூடாதாகையால் அதற்கு ஆதாரமாக வேறு ஒரு ஆத்மா வேண்டாவோ என்னில் வேண்டாம். பிருதிவீ முதலிய நான்கு ஜடப்பொருள் களின் சேர்க்கையான சரீரத்தில் தனித்தனியே அவைகளிலில்லாத ஜ்ஞாநகுணம் பிறக்கலாம். பாளைகளைக் கீறி பதனீர் முதலியன இறக்குகிறார்கள். சில கடைச்சரக்குகள் கூட்டுறவில் விஷ மருந்து சக்திகள் உண்டாகும். தனித்தனியே அவைகளில் இச்சக்தியில்லையல்லவா? சுண்ணமும் மஞ்சளும் கூடினால் செம்மை பிறக்கிறது. நீரில்லாத கடினத்தன்மை, மேகத்தின் வயிற்றில் அவை கூடி ஆலாங்கட்டியாகும்போது நேரிடுகிறது. பதனப்படுத்தினதால் பழம்

